[7th February 1959

SRI K. VINAYAKAM : Is it a fact that the District Gazetteers are not printed in Tamil but printed in English?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது நாம் கை புத்தகம் பிரசுரம் செய்கிறோம். கெஜட்டீர்களெல்லாம் ஆங்கிலேயர் காலத்திலே ஆங்கில மொழியிலே பிரசுரிக்கப்பட்டுவந்தன.

*Art silk yarn*

* 90 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government have recommended to the Central Government to issue import licences for Art silk yarn only to actual weavers or master-weavers; and

(*b*) if so, what should be the basis according to this Government, on which such licences are to be issued?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Recommendations have been made with regard to both actual weavers and master-weavers.

(*b*) The basis should be the reasonable requirements as assessed with reference to the fabric normally produced, its specification, capacity for production per loom and the normal days of working in a month.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த நார்ப்பட்டு நூல் விநியோகம், தொழிலுக்கே சம்பந்தப்படாத ஆட்களுக்கு இருக்கிறதா ? இறக்குமதி லைசன்ஸ் கொடுக்கப்பட்டிருப்பவர்கள் நம் மாகாணத்திலுள்ளவர்களாக இருக்கிறார்களா ? வெளி மாகாணத்தில் உள்ளவர்களுக்கும் இந்த லைசன்ஸ் கொடுக்கப்பட்டுள்ளதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : எந்த ஒரு பொருளில் பற்றுக்குறை ஏற்பட்டாலும், உடனே அதை உபயோகிக்கின்றவர்களும் உபயோகிக்காதவர்களும் அதை வாங்குவதற்கு முயற்சி செய்கின்றார்கள். இதில், உபயோகிக்காதவர்கள் வாங்கவே இல்லை என்று சர்க்காரால் சொல்ல முடியாது. ஏனென்றால், அவர்கள் இதற்கு முன்னால் உபயோகித்ததாக கணக்கு காட்டினால் அவர்களுக்கும் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆகையால், மற்ற மாகாணங்களில் இருக்கின்றவர்களுக்கு இங்கு கொடுத்திருக்கிறதா, இல்லையா என்று சொல்வதற்கில்லை.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த நார்ப்பட்டு நூல் வரவழைப்பதற்கான லைசன்ஸ் மாஸ்டர் வீவர்களுக்கும் தனிப்பட்ட நெசவாளிகளுக்கும் கொடுக்கவேண்டுமென்று நம்முடைய அரசாங்கம் சிபார்சு செய்திருந்தாலும், அவர்களுக்கு தேவைக்குத் தகுந்த அளவு கிடைக்கவில்லை என்ற புகார் இருக்கிறது. அதனால், அவர்கள் வெளி மார்க்கட்டிலே அதிகப் பணம் கொடுத்து வாங்க வேண்டிய நிலைமை இருக்கிறது. அந்தக் குறையை நிவர்த்திப்பதற்கு அரசாங்கம் முயற்சி செய்வார்களா ? என்ன தேவை என்று குறிப்பிடுகிறார்களோ, அந்த அளவு அவர்களுக்கு இறக்குமதி செய்ய வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முன் வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பற்றுக்குறை இருப்பதால் தான் சர்க்காரிலே விநியோகம் செய்கின்றார்கள். வேண்டிய அளவு ஆர்ட் ஸில்க் இருக்குமானால்,, இன்றைக்கு சர்க்கார் விநியோகிப்பதற்கான ஏற்பாடுகள் செய்வதற்கு அவசியம் இல்லை. இது வெளி நாடுகளிலிருந்து வரவேண்டியிருப்பதால், அதற்கு அன்னிய நாட்டுச் செலாவணி

7th February 1959]

தேவைப்படுகிறது. அதனால் அளவு ஓரளவு குறைக்கப்பட்டிருக்கிறது. கனம் முதல் அமைச்சர் அவர்கள் சொல்வது போல், நம்முடைய ராஜ்யத்திலேயே நார்ப் பட்டு நூல் தயாரிப்பதற்கான ஒரு தொழிற்சாலை புதிதாக ஆரம்பிக்க இருக்கிறது. அது வந்துவிட்டால் நம்முடைய குறை தீர்ந்துவிடும் என்று நினைக்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : இப்படி லைசன்ஸ் வழங்கப் படுவதிலே, கூட்டுறவு சங்கத்திற்கு முதல் இடம் கொடுக்க சிபார்சு செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படித்தான் செய்யப்பட்டிருக்கிறது. சென்னை ராஜ்ய கூட்டுறவு சங்கத்திற்கு சுமார் எட்டு லட்ச ரூபாய் பொறுமான ஆர்ட் ஸில்க் தருவித்துக் கொடுத்து, அதை கூட்டுறவு சங்கங்களுக்கு விநியோகம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. MARIAPPAN : மற்ற மாகாணங்களில், தேவையை விட அதிகமாக வியாபாரிகள் கோரியிருந்தாலும், அதே அளவு மாகாண சர்க்கார்கள் அவர்களுக்குச் சிபார்சு செய்கிறார்கள். ஆனால், நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரையிலும், இவர்கள் மிகவும் கடுமையாகக் குறைத்து சிபார்சு செய்ததனால், மத்திய சர்க்கார் குறைவாகத் தான் லைசன்ஸ் கொடுக்கிறார்கள் என்பது வாஸ்தவமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை ராஜ்ய சர்க்கார் நியாயமாக நடக்கிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : நம்முடைய சென்னை மாகாணத்திலே நார்ப்பட்டை விநியோகிப்பதற்கு பம்பாய், கல்கத்தாவிலே விநியோகஸ்தர்கள் இருக்கிறபடியால், நம்முடைய தேவைக்குத் தகுந்தபடி அவர்கள் கொடுக்க முடியாத நிலைமை இருக்கிறது. நம்முடைய மாகாணத்திலே எந்த எந்த ஜில்லாவிலே இது தேவையோ அந்தந்த ஜில்லாவிலேயே விநியோகஸ்தர்களை ஏற்படுத்த அரசாங்கம் ஏதாவது யோசித்து முடிவு செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நமது ராஜ்யத்திற்குத் தேவையான நூலைக் கொடுக்கவேண்டும் என்று தான் நாம் இப்பொழுது சிபார்சு செய்திருக்கிறோம். அதற்கான முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கிறோம். இதை விநியோகிப்பவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பது முக்கியம் இல்லை. நம்முடைய ராஜ்யத்திலே தேவையான நூலைக் கொடுப்பதற்கு ஜாயிண்ட் கண்ட்ரோலருக்கு அதிகாரம் கொடுக்கவேண்டுமென்று இப்பொழுது சிபார்சு செய்திருக்கிறோம்.

*Bus route cases*

* 91 *Q.*—SRI K. RAMACHANDRAN (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have issued any directions to the State Transport Authority and the Regional Transport Authorities to give out their findings in bus route cases within a specific period?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir.

SRI K. RAMACHANDRAN : பஸ் ரூட்டுகள் சாங்ஷன் ஆனாலுங் கூட, பஸ் போக. ஆரம்பிப்பதற்கு குறைந்தது மூன்று நான்கு மாதங்கள் ஆகின்றன. அப்படி யில்லாமல், பஸ் ரூட் சாங்ஷன் ஆனவுடனேயே பஸ்களை விடுவதற்கு அரசாங்கம் உத்தரவிடுவார்களா ?